உ

சிவமயம்.

# ஆதிபுரி

# வடிவுடையம்மை பிள்ளைத்தமிழ்.

வித்துவான் - கனகசபைத்தம்பிரான்

அவர்கள்

அருளிச்செய்தது.

---

இஃது

ஊ. புஷ்பரதசெட்டியாரால்

தமது

சென்னை

கலாரத்நாகர அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1871.

உ

கணபதி துணை.

# ஆதிபுரி

# வடிவுடையம்மை

## பிள்ளைத்தமிழ்.



### குணாலயவிநாயகர் துதி.

பூமேவு திருமாது மணிமார்பி லுறைகின்ற
புயல்வண்ண நெடுமாயனும்
புகழ்பெற்ற கலைமாது மறைநாவி லுறைகின்ற
புத்தேளு மலர்துன்றிய
காமேவு கற்பகப் பொன்னுலகி லுறைகின்ற
காவலனு முனிவோர்களுங்
கருத்தி லுறைவித்தேவல் செய்யுங் குணாலயக்
களிற்றின்மல ரடிபணிகுவாந்
தேமேவு கொன்றைச் செழுந்தேன் றுளிக்குந்
தியாகப்பிரான் வேணியாஞ்
செங்கொண்டல் கண்டுகண் டுள்ளங் களிக்குமொரு
தெய்வமட மயிலையடியார்
பாமேவு மாதிபுரி வைகுகிளி யைப்புலவர்
பன்னுதிரி புரசுந்தரப்
பாவையைக் கருணைமழை பொழிவிழிக் கொண்டலைப்
பரவுதமிழ் தழைகவென்றே.

# காப்புப்பருவம்.

## திருமால்.

நீர்பூத்த செக்கர்ச் சடாமகுட மேல்வைத்த
நிலவினைக் கண்டுமலரு
நெடியவிழி யுற்பல மணந்தமுக மதியினொடு
நின்மலன் விழித்திங்களுஞ்
சூர்பூத்த வென்வினை துமித்தவிழி யிரவியுஞ்
சூழ்ந்துமுன் னின்றளவளாய்த்
துன்னவெழில் கொண்டுதிரு வொற்றிமா நகரினுறை
சுந்தரியை யினிதுகாக்க
சீர்பூத்த மறையண்ணன் மணிநா வகங்கொண்ட
தேவிபுல வோரிடமெலாஞ்
சென்றுவிளை யாட்வய வீரிட மெல்லாஞ்
சிறந்துவிளை யாடவிசையை
தார்பூத்த மருமத்து மலர்மாது முலகெலாஞ்
சார்ந்துவிளை யாடமுழுதுந்
தண்கட லுறங்கியு முயிர்த்தொகை யளிக்குமொரு
சக்கரச் செங்கைமுகிலே. (க

## பரமசிவன்.

அருமறைக்குமுய ரமரருக்குமய னரிதமக்குமறி யா
பொற்றாட்டுணை, யறையுமுப்பொழுது மறலுகுத்துவிழு ம
ர்பறித்தணிசெய் வார்கண்முற்காட்டியு, மமரர்கற்பகமு
ணிநிதிக்குலமு மமிழ்துமற்றையவும் வீசுகைப்பூத்தனி, ல
வருப்புடைய வுடைதலைக்கலனை யகிலமட்டவுண வார்தர
சாத்தியு—மிருநிலத்தவரா நிறைச்சுகக்கடலி னிடைவிதித்
மறை வாயின்மிக்கார்த்திடு, மிருணிறக்கடலி னுயிரனைத்

முள மிலையவுற்றவிட மாதரத்தூட்டியு, மினிமைமிக்கமதிப்பு னல்பதித்தசடை யிடையழற்கண மாலையைச்சூட்டியு, மிம யநற்கயிலை யெழில்கொளொற்றியென வெனதுளத்துறை தியாகனைப்போற்றுது—மருமலர்க்குழலு மொளிறுதற்சிலை யு மதர்விழிக்கயலு மூசலைத்தாழ்த்திய, வடிகுழைச்செவியு முறுவனித்திலமு மலர்முருக்கிதழு நாசியிற்றூக்கிய, மணிகுயிற்றணியும் வளர்கழுத்தணியும் வரிபுயத்தணியும் வால்வளைக்கூட்டமும், வனசமொத்தகர தலமுமுற்பலமென் மணிவிரற்செறியு மோதிரத்திட்டமும் — விருதெடுத்தனைய வெழுதெழுத்தினொடு மிகுவிளைக்கலவை யாடுறச்சாத்திய, மினிர் முலைத்தரள வடமுமிட்டிடையின் விரவுபொற்கலையு மாடகத்தாக்கிய, விலையிடற்கரிய பரிபுரப்பதமும் விழிகளிப்பவெதிரேவெளித்தோற்றிய, விமலவுத்தமியை வடிவுடைக்கொடியை விடையுயர்த்தசுவு மாரியைக்காக்கவே. (௨)

## விநாயகர்.

தேவரருந்துங் கலைமதியைத் தெவிட்டாதருந்த விடைவகிர்ந்து, செவ்வாய்க்கடையி னொருபிளவைச் சேர்த்தோர்பிளவும் பிடித்ததுபோன்—மூவர்விழையும் பெருங்கருணை முகத்தோர்மருப்பு மொருமருப்பு, முளரிக்கரத்து மழுகெறிக்குமுக்கட்களிற்றி னடிபணிவாங்—காவல்புரியு நெடியோனைக் கமலத்தவிசின் முதியோனைக், காய்ந்துநிறுவும் பழையோனைக் காதற்குழவி யெனவளர்க்கும்—பாவமகன்ற பராபரையைப் பண்ணம்பணைத்த வருளாளைப், பரவும்பதும புரத்தாளைப் பறம்பின்மகளைப் புரக்கவே. (௩)

## சுப்பிரமணியர்.

சிலம்புசதங்கை கலகலெனத் தெருவில்விளையாட் டயரிளமைச், செவ்விகடக்கு முனந்தேவர் சேனபதியாய்ச் சயசூரன் — குலம்பற்பலவுஞ் சிலதினத்திற் கொன்றுகுவித்து

விண்ணுலகங், குடியேற்றியபன் னிருதடந்தோட் குமரப் பெரும்மாள் சரண்பணிவா—நலம்பல்லுயிர்க்கு மினிதருள ந ளிமாலிமயத் தடஞ்சிலம்பி, னறுநீர்ப்பசும்பொற் சுனைபூத் த நளினமலர்ச்சேக் கையிலிருந்த—வலம்புமணிநூ புரச்செ ழுந்தா ளன்னப்பெடையை யெழில்கொழிக்கு, மாதிபுரிவா ழ்திரிபுரசுந் தரவாரணங்கைப் புரக்கவே. (ச)

## பிரமன்.

ஒருகாற்கமலத் தடங்கண்ண னுந்திக்கமலத் திடைப்பிறந்த வுரிமையானு மற்றொருகா லுவணமுயர்த்தோன்றனைவிழுங்கி யருகாவிழைவினின்றெடுத்த வாண்மையானும்பிதாமகனென் றகிலமுழுது மெடுத்தேத்து மன்னக்கொடியோ னனிபுரக்க முருகாரிதழிச்சடைமௌலி முதல்வர்க்கன்னையாய்மகளாய் மூத்தாளாகி யிளையாளாய் முயங்குமனையாய் முழுதுலகும் பெருகாதரவினுயிர்த்தளித்துப் பிறழாத்தெய்வக் கன்னியை யென்—பிழையுந்தொலைப்ப வாதிநகர் பேணிவாழ்சுந் தரித னையே. (ரு)

## இந்திரன்.

மடல்விண்டவிழ்ந்த நறுவாச மலர்க்கற்பகமு மிருநிதியு மாசற்றுயர்சிந் தாமணியும் வற்றாச்செருத்தற் சுரபியுநின் றிடர்விண்டவிழ்ந்துவிழவெவர்க்குமிரப்பதளிப்பக்கடைவிழி லேவித்துரக்கங் காவல்புரி யேந்தற்கடவு ளனிபுரக்க [யா வுடல்விண்டவிழ்ந்த சீரடியார்க் குயர்ந்தவீடுந் தருவாதி யோராம்பொருளு மெப்பொருளு முலகோர்தமக்கு மெளிதரு தவி—யடல்விண்டவிழ்ந்த நெடுஞ்சூலத் தமலனடியில் வீற்றி ருப்ப, வலர்ந்துலகுளம் வீற்றிருக்கு மாதிபுரிசுந்தரிதனையே

## திருமகள்.

பச்சைப்பெருமாள்வளர்மேனிப் பவளப்பெருமாளுலகளந்த
பாதப்பெருமாள்பாம்பணையிற் படுக்கும்பெருமாளுயிரளிக்கு
மிச்சைப்பெருமாண் மணிமார்புமிதழ்விண்டலர்ந்ததாமரையு
மெய்துஞ்செல்வத்தவரிடமுமிருந்துவிளையாட்டயர்மடந்தை
யச்சப்பிறவிக் கடல்கடந்த வடியாருள்ளத் தனிமலரு
மரியயோகப் பெருந்தவத்தோ ராருதாரத் திருமலருஞ்
செச்சைத்திருநீற் ருெளிமேனித் தியாகப்பெருமா ளுடனுற்
தெய்வநகரும் விளையாடுஞ் சிலம்பின்மகளைப் புரக்கவே. [றித்

## கலைமகள்.

வெள்ளைமயமா கியசாத்து விதநற்குணத்தோர் தமக்கன்
றி, மேவாஞானந் தனைவளர்க்கும் வியனூர்கலைக்குந் தெய்வ
தமாய்த்—தொள்ளையகற்று மொருதானுஞ் சுடர்வெண்ணிற
மாய் வெண்கமலத், தொல்லைமனையிற் குடிகொள்ளுந் தூவி
ச்சிறையோ திமமாது—வள்ளைமருட்டுமிருசெவியின் மணிப்
பூங்குழையின் வெண்ணிலவும், வதனநிலவு நுதனிலவும் வ
ற்ருக்கருணை நகைநிலவுங் — கிள்ளைவளர்கை வளைநிலவுங்
கெழுவியகிலாண் டமும்விளர்க்கக், கீர்த்திநிலவு மொற்றிந
கர் கிளர்பார்ப்பதியைப் புரக்கவே. (அ)

## சத்தமாதர்கள்.

(வேறு.)

தூயமறையேபடை யாகத்தரித்தவள் சூழ்விசயநாடுபி ஞ
கக்கரத்தின, டோகைமயிலேறிவை வேலைப்பிடித்தவள் சோ
திவளர்பாணியி லோர்சக்கரத்தினள் — பேயின்முதுகேறிய்
சூலத்தொடிக்கையள் பேரசுரர்மார்புழு நீள்பொற்கலப்பை
யள், பீடுமலையாண்மையை வீழ்வச்சிரத்தினள் பேசுமெழு
மாதர்க டாளைப்பழிச்சுது—மாயன்முதலோர்முன மோலிட்

டாற்றலும் வாருமிருநீவிர்க ளேதுக்கிளைத்தனிர், வாழ்வுத ருவாமெனவோதிக்கலக்கிய மாகடலின்மீதெழு மாலத்தின ற்சுவை—யாயுமறைநாவின ளாவித்தெரித்தபி னுனவடை யாளமதாகக்களத்திடு, மார்கருணைநாயகர் பாகத்தொருத்தி யை யாதிநகர்மேவிய மாதைப்புரக்கவே. (௬)

## பலதேவர்கள்.

(சந்தவிருத்தம்.)

வீசுமணமிக்கமத வாசமலர்மொய்த்ததொடை மேவியறலு க்கொத்து நீளுமளகத்தியை, மேருவினிவப்பவளர் வானவில் பசப்பமத வேழவிலிறப்பக்கு லாவியகுளத்தியை, வேலைவி டமத்தனுன வாரமிழ்தினற்பயன்வி ராவவதினுற்றுச்சு லா வுநயனத்தியை, வீறுமகரக்குழையி னுடிமணிமுத்தவிய னூ சலையறுத்திட்ட வார்செவிவனப்பியை—வாசவனிதிப்பணில மாசறவுயிர்த்தகுரு மாமணியின்மூக்குத்தி நாசிகைபுடத்தி யை, வாரிசமலர்த்தலையி னுரவிரல்வைத்தனைய வாணகைமு கிழ்த்துக்கு லாவியவெயிற்றியை, வாசுகிவளைத்துமலை வாரி திகலக்கவெழு வானமிழ்தினிப்பப் பராவுமதரத்தியை, வா னவர்நிதிப்பதும மாமிழ்துகுத்ததென வானருள்கொழித் திட்ட சீதளமுகத்தியை—யீசனிருகைக்கமல நேசமொடுக ட்டுவட மேலணிதிருத்தித்து ழாவியகழுத்தியை, யேதிலமெ ணப்பசிய வேய்வளையிடத்தொழிய வீகைவளைமுத்தத் தழா லுறுபுயத்தியை, யேமகடகத்தொடர்கண் மோதிரமணிச்சரி களேமுறவெடுத்திட்ட பூங்கர்கரத்தியை, யேசில்கலவைப் புழுகு பூசியெழுதித்தரள நீடுகனகப்பணிகள் பூணிருதனத் தியை—யாசைவளர்மத்தமத யானைவளமத்தகமோ டாடர வொழித்துச்ச மார்கடிதடத்தியை, யாடகமிழைத்தவரி நூ

புரமூதர்த்த * பரி யாகமுமனைத்துக்க லீலெனுமடிச்சியை, யாதிகருற்றடியர் மோகவினைமுற்றுமற வாரருள்கொழித் திட்ட மேயருளொருத்தியை, யாதவருருத்திரர்கள் சேர்வ சுமருத்துவர்க ளானவிவர்முப்பத்து மூவர்கள்புரக்கவே. ()

காப்புப்பருவம் முற்றிற்று.

---

## செங்கீரைப்பருவம்.

வாருற்றவெண்டிரை மணிப்புணரிமேகலை மருங்குடுத் தோங்கன்மூலைமேன், மணிக்கச்சணிந்தருவி நித்திலவடம் பூண்டு வைகுபுவிமாதுதலையி—னேருற்றிருப்பக் குறித்தவ ளிருஞ்சுத்தி யெய்தவொருதீக்கைசெய்தாங், கிருகையுநிலத் திற் பதித்தொருமுழந்தா ளிருத்தியெழில் கொப்புளிப்பப்—பேருற்றமற்றொரு முழந்தாணிமிர்த்துப் பிறங்கொளிய ரத் தவடியும், பெய்துமுகமலர்மே னிமிர்த்துலகமின்பப் பெரு க்காற்றி னென்றுமாடச்—சீரொற்றிமாநக ரிருந்தவடிவுடை யம்மை செங்கீரையாடியருளே, தேவர்க்குமூவர்க்கு மியா வர்க்கு மொருமுதல்வி செங்கீரையாடியருளே. (க)

பொருவற்றசீறடி யணிந்தமணிநூபுரம் பொன்னஞ்சதங் கைதண்டை, பொற்றொடர்செழும்பா டகங்களிவைமெல்ல ப் புலம்பிநின் றசையவிடையின்—மருவுற்றமேகலை மணிக் காழ்களசையமென் மலர்க்கைவளை தோளங்கத, மார்பிலொ ளிர்நித்திலவ டங்களசையக்காது வார்ந்துகுழையோடும சையக்—குருவுற்றவாணுதற் சுட்டியசையச்செருகு கொண் டைமலர் மாலையசையக், கோமளத்திருமேனி முற்றுமசை யக்கருணை கோட்டுநின்வதனமசையத்—திருவொற்றிமாநக

---

* பரியகம் என்பது பரியாகமென நீண்டுநின்றது.

ரிருந்தவடிவுடையம்மை செங்கீரையாடியருளே, தேவர்க் குமூவர்க்கு மியாவர்க்குமொருமுதல்வி செங்கீரையாடியரு ளே. (உ)

மின்னொத்தநுண்ணிடைப் பொற்கொடித்தேங்குழன் மே னையெனுமாதுபண்டை, மெய்த்தவம்வாய்ப்பநின் றிருமேனி தொட்டுவிளை நீராட்டியீரமொத்திப்—பொன்னொத்ததேமற் பயோதரத்தொழுகுபால் பூங்குமுதமலரைவென்ற, பொழி கதிர்ப்பவளவா யூட்டிப்பொலன்கலம் பொற்பத்திருத்தியழ கு — மன்னத்தடங்கண்ணி னஞ்சனந்தீட்டிமதி வாணுதற் பொட்டுமிட்டு, மார்பத்தணைத்துவாய் முத்தாடிவைத்தாட ம ல்குமருள்கூர்ந்துவளருந்—தென்னொற்றிமாநக ரிருந்தவடிவு டையம்மை செங்கீரையாடியருளே, தேவர்க்குமூவர்க்கு மி யாவர்க்குமொருமுதல்வி செங்கீரையாடியருளே. (௩)

வருந்தத்தவங்களா லாற்றுபலவேள்வியான் மாசற்றயோ கங்களான், மற்றுமுளசெயல்களா லொன்றுனுமறியாத வா ய்மையுருவானபொருணீ — பொருந்தத்தலைக்கணுறு பார் வையினுயிர்க்கெலாம் புரைமுழுதகற்றவருளாற், பூண்டதிரு மேனியைத் தங்கள்வடிவங்கள்போற் புந்திசெயுமடவார்க ளா—யிருந்தத்துவாவினல தெம்முருவநும்மதி னெனத்தலை யிஞென்மறித்தாங், கிலகெழில்கொழிக்குமுழு மதிமுகங்மிர்ந் தசைய விளங்லாநகைமுகிழ்ப்பத்—திருந்தொற்றிமாநக ரிரு ந்தவடிவுடையம்மை செங்கீரையாடியருளே, தேவர்க்குமூ வர்க்கு மியாவர்க்குமொருமுதல்வி செங்கீரையாடியருளே.

பொறிவைத்தமணிமார்பி னெடியோனுமதுவொழுகு பூவ ணையிஞென்முகவனும், பொன்னுலகினரசுபுரி யிந்திரனுமாதிர ப் புலவோரும்வானவர்களும்—மறுவற்றகருடர்கிம் புருடர் கின்னரர்களும் மாதவசிராக்கதர்களும், மல்குவிஞ்சையர்க

ளுஞ் சித்தர்சாத்தியர்களும் மற்றுமுளவனைவோர்களும்—வெறிதுற்றபொன்மலர்க ளேய்த்தொழவவர்க்கருள் விழிக்கடைவழங்குமாறு, மெல்லவிருபாலுந் திரும்புமதுபோலொளி விரிக்குமுகமசையவழகு—செறியொற்றிமாநக ரிருந்தவடிவுடையம்மை செங்கீரையாடியருளே, தேவர்க்குமூவர்க்குமியாவர்க்குமொருமுதல்வி செங்கீரையாடியருளே. (ரு)

வேறு.

முத்தினிசைத்த மௌத்திகம்வார்குமிழ் மூக்கினசைந்தாட
முரிசிலைநிகர்நுத லொளிவிடுசுட்டிமு றுக்கினெழுந்தாடக்
கத்திகையோடமி லம்பகமாடக் கதிரவருதயமெனக்
காதணிகுண்டல நான்றிருதோள்கள் கலந்துதுவண்டாடக்
கொத்துறுவித்துரு மத்தொடைநித்திலகோவைபிணைந்தாடக்
கோற்றொடியங்கத மேகலைநூபுர கோலமிகுந்தாட
வத்தனிடத்தம ரொற்றிநகர்ப்பவை யாடுகசெங்கீரை
யருமறைமுடியுறை திரிபுரசுந்தரி யாடுகசெங்கீரை. (சா)

மணிமலையெனவரு கருநிறமகிடனை வன்களனிடையெதிரா
வார்புருவச்சிலை தாங்குனியக்கையின் வரிசிலையுங்குனியத்
தணிவறுவெகுளி விழிக்கணையோடு தழற்கணையுங்கடவித்
தனையவர்பாதல வுரகர்களமரர்கள் சகலருமுளம்வெருவத்
திணிவரைநிரைபலபிதிர்படமிகுசமர் செய்தவனொருதலையிற்
றிவள்பரிபுரவொலி மறையொலியுடனெழு திருவடிநிறுவினி
யிர்ந், தண்வளர்நடமிடு மாதிபுரத்தவ ளாடுகசெங்கீரை
யருமறைமுடியுறை திரிபுரசுந்தரி யாடுகசெங்கீரை. (எ)

செங்கமலம்புரை யும்பதமொன்று சிலம்புமசைந்தாடத்
திருவரைகட்டிய வாளரவுந்திக ழுக்குமசைந்தாடப்
பொங்கொளிமார்பணிமுப்புரிநூலொடு பூண்களசைந்தாடப்
புயவரையிழியரு வியின்மணிமாலிகை பொங்கியசைந்தாடக்

கங்கையிளம்பிறை வெண்டலைவிண்ட கடுக்கையசைந்தாடக்
கவின்மிகுமொற்றி யிடத்துயிருய்வகை கண்ணியசைந்தாடு
மங்கணர்பங்குறை நங்கையசைந்தினி தாடுகசெங்கீரை
யருமறைமுடியுறை திரிபுரசுந்தரி யாடுகசெங்கீரை. (அ)

வேறு.

அருவெனவுருவென வலனெனநின்றவன் மன்றுடும்போது
மவிர்சுடர்விழிமலர் பலவும்விழைந்து விருந்தாருந்தேசு
மருவியமுகமுமி ழொளியெதிர்கண்டு வளஞ்சாலுந்தேவர்
மலிகுருகினமொடு மதியிதுவென்று மகிழ்ந்தார்வங்கூர
விருநிலமகிழ்தர வருமுனறிந்து பசுந்தேன்ந்தாத
விணர்மலர்சொரிதர வதனமசைந்துவ சிந்தேபண்போடு
திருமகள்கலைமகள் வழிபடுமம்பிகை செங்கோசெங்கீரை
திசைமுகனகருறை திரிபுரசுந்தரி செங்கோசெங்கீரை. (௯)

அனவரதமுமுன தடியவரன்பின்வி ளைந்தூறுந்தேனே
யகமலரறுவகை யினுநிலைபண்பின ரங்காகுந்தேசே
யினமலரிடுமவ ரிதயமெழுந்தக ரும்பேதண்பாலே
யிணையறுபணிபுரி யியல்பினர்சிந்தையி ருந்தாளுந்தோகாய்
புனன்மதியரவு டனசையவசைந்துபொ லிந்தாடுந்தியாகர்
புயவரைதழுவிய வமிழ்துகுகொம்பின்வ ளர்ந்தேறும்பாகே
தினகரனெனவுல கிடைவருசங்கரி செங்கோசெங்கீரை
திசைமுகனகருறை திரிபுரசுந்தரி செங்கோசெங்கீரை. (௧0)

செங்கீரைப்பருவம்-முற்றிற்று.

---

## தாலப்பருவம்.

துணிபொற்றகட்டின் மணியிழைத்த தூவிசுடருமுடியாக்
த், துலங்குமுடுக்க ளமரர்குழாஞ் சொரிபூமாரி வளங்காட்

டப்—பிணிமுற்றெழுந்த பெருவனப்பின் பேதைமடவா ரி டைவதிதல், பிரசமலரான் மணிமார்பிற் பேணியிருக்கு மெ ழில்காட்ட—மணிமுற்றிழைத்த நெடுமாடம் வளர்ந்தநெடு மா லுருக்காட்ட, மற்றுங்கெழுந்து நுடங்குகொடி வானம வளர்ந்த பதங்காட்டு — மணிமுற்றமைந்த வொற்றிநக ரரசே தாலோ தாலேலோ, வகிலமுயிர்த்த வடிவுடைப்பெண் ணமுதேதாலோ தாலேலோ. (௪)

கொண்டற்குழுவுங் கலைமதியுங் குளிர்வான்கங்கைப் பெ ருக்காறுங், குளிர்மாமணிச்செஞ் சூட்டரவுங் கொலைபூத்த லர்சூ லப்படையு—மண்டிக்கதிர்ப்ப மிசையணிந்து வடிவ முழுது நீற்றொளியின், வயங்கிநெடுமா டமுஞ்சிறந்த ம ண்ணிற்சிவலோ கமுமாகிப்—பண்டைமறையு மறிவரிய ப ரமற்கிடமா மித்தலத்திற், பயிலுந்தவத்தா லவனுருவம் ப ரித்துவிளங்கும் பரிசேய்க்கு—மண்டரிறைஞ்சு மொற்றிநக ரரசேதாலோ தாலேலோ, வகிலமுயிர்த்த வடிவுடைப்பெ ண் ணமுதேதாலோ தாலேலோ. (௫)

சந்தமறையின் முழக்கானுஞ் சகலகலையின் வழக்கானுந், தயங்குகாயத் திரியானுந் தண்டாதோம்பு மெரியானும்—ப ந்தமறுக்குந் திருமறையோர் பண்டுபெறுஞ்சோ திலையவனைக் கும், பதுமக்கடவு ளின்றுபல படிவமெடுத்துப் பரவொளி யைச்—சிந்தைமகிழ்ந்து தரிசிக்குஞ் செய்திகாட்ட வாகன முந், திகழ்ந்துபலவா யமைத்ததுபோற் றிறையோதிமங்கள் பல்பயிலு—மந்தண்வயல்சூ ழொற்றிநக ரரசேதாலோ தா லேலோ, வகிலமுயிர்த்த வடிவுடைப்பெண் ணமுதேதா லோ தாலேலோ. (௬)

திருத்தன்சிவலோ கப்பெருமான் றேவர்பெருமான் வழ ங்குமணித், தியாகப்பெருமா னெழுத்தறியுஞ் செல்வப்பெ ருமான் றிகழ்பதும—திருத்தப்பெருமான் மதிதோறு நெடு

வீதிகளி னெழுந்தருளி, நிகரில்காட்சி கொடுத்தலினு னெடுந்தாழையுமெம் நிருமலன்முன்—வருத்தமறுக்கு முருத்திரனை வழங்கியாங்கு வளரோடு, மணிக்கண்மூன்றுந் தீம்புனலு மருவும்பசுங்காய் பலதோற்று—மருத்தமருளு மொற்றிநக ரரசேதாலோ தாலேலோ, வகிலமுயிர்த்த வடிவுடைப்பெண் ணமுதேதாலோ தாலேலோ. (ச)

வேலைக்கடலிற் புனல்பருகி விண்ணிற்பரவுங் கருமுகிலை, வேதவிதியி னவிசொரியும் வேள்விக்களத்து விழுப்புகையை—மாலைக்குழன்மென் மடமாதர் மாடநிலைக டொறுமடுத்து, மணிச்செய்சுருங்கை திறந்துவிடும் வாசங்கமழுங் கொழும்புகையைச்—சோலைக்கருகு செழுங்கன்னற் சுவைச்சாறடுதீம் புகைதன்னுட், டுன்னவடக்கி மதியிரவி சோதிமறைத்துத் துறக்கமுறு—மாலைக்களஞ்சூ ழொற்றிநக ரரசேதாலோதாலேலோ, வகிலமுயிர்த்த வடிவுடைப்பெண் ணமுதேதாலோ தாலேலோ. (ரு)

மறைகண்மணிச்செய் காலாக வளர்மண்ணுதி வடிவெட்டும், வகுத்தசட்ட மவையாக வதியப்படுத்த தாகமமா—நிறையுமிரண்டு ஞானமுமே நீக்கில்வடமாத் துரியமென, நிலவுத்தரத்திற் கோத்தமைத்த நிகரின்மணித்தொட் டிலினிவர்ந்து—குறைவில்பரமா கியமுனையிற் கோதிலடியா ரொணுஞ்சுற்றங், குழூஉக்களிப்பத் தாலாட்டுங் குழந்தாயடியேந் தவப்பேறே—யறைதண்கடல்சூ ழொற்றிநக ரரசேதாலோ தாலேலோ, வகிலமுயிர்த்த வடிவுடைப்பெண் ணமுதேதாலோ தாலேலோ. (சு)

பசும்புலறுகும் வெண்டும்பைப் பனிமென்மலரும் பொன்னிதழிப், பைந்தேன்றொடையுஞ் செஞ்சடையிற் பயிலுந்தியாகர் திருவுருவின்—விசும்பினெழுமிந் திரவில்லின் விரவிப்

புவன மெனுமனையின், மிடலாணைவுத் திரத்திசைத்து விடு த்தகரண வடத்திட்ட—தசும்பினிழைத்த வுடற்றொட்டிற் சார்வித் துயிராங் குழவிகளைத், தண்டாதினிது தாலாட்டுந் தாயேயிமைய மகளேதே—னசும்பும்பொழில்சூ ழொற்றி நக ரரசேதாலோ தாலேலோ, வகிலமுயிர்த்த வடிவுடைப் பெண் ணமுதேதாலோ தாலேலோ. (எ)

சரியைகிரயை யியற்றுநர்க டத்தமிதயத் தொட்டிலினுந், தண்டாயோகத்தவராரு தாரமலர்ப்பூந் தொட்டிலினும்— விரியுமறிவை யறிந்தவர்கள் வெளியேயசமே யெனும்விசற்ப ம், விரவாச்சுத்தத் தொட்டிலினு * மேவித்தினிது தாலாட்டு —முரியமகளே யாங்களிடு மொளிமாமணிப்பொற் றொட்டி லினு, முவந்துவிளையாட் டயர்கிளியே யுவணமுயர்த்தோன் சகோதரியே—யரியபொருள்சே ரொற்றிநக ரரசே தாலோ தாலேலோ, வகிலமுயிர்த்த வடிவுடைப்பெண் ணமுதே தா லோ தாலேலோ. (அ)

வேறு.

அயனெனவரியெனவரனெனநின்றவர் தாயேதியாகேச ரகமகிழ்மணமகளெனவவர்பண்பறி மாதேதேதேயென் றியவரினரியிசை முரன்மலர்மங்கையர் வாழ்வேதாழ்வார்க ளவைவெவைவிழைவனவவையவைதந்தருள்பாவாயதுவா கயமுனியெனவொருமகனைவழங்கியகாவேயோவாத [யாய் கலைமறைமுதலிய பனுவன்மலர்நெடு தேனேவானுடர் சயசயசயவென வழிபடுமம்பிகை தாலோதாலேலோ சதுமுகனகருறை திரிபுரசுந்தரி தாலோதாலேலோ. (கூ)

---

* மேவுவித்தென்பது, மேவித்தெனவிகாரமாய்நின்றது.

மரகதமயிலின னுணமுலைதந்தவ டாலோதாலேலோ
வளர்கவுணி பனுண வமிழ்துகறந்தவ டாலோதாலேலோ
கரிணியினுரிபுரி கருணையர்பங்கின டாலோதாலேலோ
கயமுகன்வரவொரு பிடியின்விழைந்தவ டாலோதாலேலோ
விரணியசபையினர் நடனமுவந்தவ டாலோதாலேலோ
வெழின்மிகு பதுமநன்னடனமு வந்தவடாலோ தாலேலோ
தரணியுமருள்பெற தரையின்வளர்ந்தவ டாலோதாலேலோ
சதுமுகனகருறை திரிபுரசுந்தரி தாலோதாலேலோ. (௧௦)

தாலப்பருவம்-முற்றிற்று.

---

## சப்பாணிப்பருவம்.

---

தெண்டிரைசுருட்டும் பனிப்பெரும்பாற்கடல் சிலம்புநட்டரவுசுற்றித், தேவரொடுதானவர்கடைந்தகொடுவிடமன்று சீறிக்கொதித்துவரலும்—வெண்டலைபுனைந்தருடியாகப் பிரானதனை வெவ்வுகனிவாய்மடுப்ப, விளங்குபகிரண்டமுமொடுங்காது தடைசெய்து மென்மலர்ச் செங்கைகளாற்—கொண்டல்பொழிதண்டுளியினூடுசுவைமண்டுபண் கொண்டுமினவண்டுகிண்டக், குறுமலர்முறுக்கிதழ்கள் விண்டுபொழிருண்டுளிக் கோற்றேனுமிடையறுத—தண்டலையுடுத்ததிருவொற்றிநகருறையம்மை சப்பாணிகொட்டியருளே, தடவரைச்சுகுமாரி வடிவுடைக்கவுமாரிசப்பாணிகொட்டியருளே.

வழங்குபலவுயிர்களுக் குயிராகியறிவுகள் வளர்ப்பதேயன்றிவெளியின், மல்குபலபொருளெலாங் காட்டலுந்தம்பிரான் மணியுருவினொளியாமெனப்—பழங்கணுறு மடவோருமெண்ணியெளி துய்யப்பரிந்துதிரு விளையாட்டினாற், பரிதி மதிதழல்களுங் குருடாகவெங்கணும் பாயிருள்பரந்து மூட—முழங்கழனுதற்கணெதிர்மலரமலரிணைவிழிகண்மூடுநின்.

செங்கைமலரான், முத்தநிறைவித்தரும கித்தலுநெடுந்திரை
முகந்துதுறை தோறுமுலவுந் — தழங்குகடல்சூழ்ந்ததிரு
வொற்றிநகருறையம்மை சப்பாணிகொட்டியருளே, தடவ
ரைச்சுகுமாரி வடிவுடைக்கவுமாரி சப்பாணிகொட்டியரு
ளே. (௨)

விண்ணவர்படைக்கலத் தெறுமொருதுரும்பினான் மேவி
னரளந்துமலையை, வில்லெனவளைத்துநகை நகநயனமடிகளா
ன் மிக்கப்கைசாய்த்துமமரு—மெண்ணரியபெருவலிய ரோனு
மிருமன்பினர்க் கெண்மையினுமென்மையரொனு, மிறைவர்தி
ருவருள்கண்டு மடவோருமுய்யமு னெழுந்தகம்பாநதிக்கட்
—டிண்ணியபெருங்கற்பி னன்பிற்றழீஇயமலர் திருமேனிகு
ழைவித்தநின், சிலைவளைக்கங்கணச் செங்கைமென்றளிர்கொ
ண்டு சேண்டொடநிவர்ந்தசீர்த்தித் — தண்டலையுடுத்ததிரு
வொற்றிநகருறையம்மை சப்பாணிகொட்டியருளே, தடவ
ரைச்சுகுமாரி வடிவுடைக்கவுமாரி சப்பாணிகொட்டியரு
ளே. (௩)

அருவிவளர்கயிலைச் சிலம்பனுநெடுந்தவ மகற்றியின்பந்தி
ளைப்ப, வரிபிரமரிந்திரன் முதலானதேவர்மற் றனைவோருமெ
ண்ணிலுயிரு — மருவலுறுதத்தம துயிர்த்துணையினோடும் வ
திந்தின்பவாரிபடிய, வானோங்குமிமயத் தடங்கிரிப்புரவல
ன் மகிழ்ந்தினிதுவாக்குநீரோ—டொருவிழிநுதற்கட் படை
த்தவச்சிவபிரா னுவந்துதன்செங்கையேற்ப, வுயர்வறவுயர்
ந்தருள் சுரந்துயிரளிக்குநின் றெண்டொடிச் செங்கைளா
ற் — றருமகிழ்சிறந்ததிரு வொற்றிநகருறையம்மை சப்பா
ணிகொட்டியருளே, தடவரைச்சுகுமாரி வடிவுடைக்கவு
மாரி சப்பாணிகொட்டியருளே. (௪)

வண்டாடுமலரவன் வெண்டிரைப்பாற்கடன் மலர்க்கண்
படுக்குநெடியோன், மதக்கலுழிதூங்குமயி ராவதக்குரிசி

னெடுவாளுடர் முக்லோர்களைப் — பண்டர்வியோடும் விராய்வெளித்தோற்ருது பாழிவளர்வீரியநகர், பண்டாசுரப் பெரும் பதசனுயிர்சிந்திப் பசுங்கழைச்சிலைவளைத்து — விண்டாருமம்புயஞ் சூதமொடசோகம்வெண் முல்லைமலர்நீலமென்னும், விசிகந்தொடுத்தின்ப வெள்ளம்பெருக்குநின் மென்மலர்ச்செங்கைகளாற் — றண்டாவளங்கொடிருவொற்றிநகருறையம்மை சப்பாணிகொட்டியருளே, தடவரைச்சுகுமாரி வடிவுடைக்கவுமாரி சப்பாணிகொட்டியருளே. (ரு)

வேறு.

அங்கணர்திங்கண்முடிச்சடிலத்தமரத்தனைகங்கையுமற்
றவர்கயிலைக்கிரி வளர்பலகங்கையு மந்தரகங்கைகளுந்
துங்கமுடிக்கன கச்சிலைமுதலிய தொல்கிரிகங்கைகளுஞ் [ரியு
சுரர்தொழுதிரிபத கையுமெழுபொருனைத் துறையுமோர்காவி
மெங்குளகங்கையு மாருயிர்செய்திடு மெத்தனைபாவமுநீத்
திகபரமுத்தி யளித்தருண்மேன்மையி ணக்குநின்கைகொடு
கொங்குயர்பொழில்செறி யொற்றிநகர்ப்பரை கொட்டுகசப்
குடிலையினிலைபெறு திரிபுரசுந்தரி கொட்டுகசப்பாணி.[பாணி

செந்தமிழ்தந்து நெடுந்திரைவேலைசி லம்பொடடக்கிநிலஞ், செவ்வனிறுத்திய முனிசிவமுணரத்திசைமுகன் சிறையெய்த — வெந்திறலவுணனி டுஞ்சிறைநின்றும் விசும்பினரொளிதகல, மேதகுமுனிவர ராதியரோத்தி விழுத்தகுவரமேவ — வந்தருள்கந்தர்தம் மாறுருவுந்தனி வடிவமெனச்செய்து, மல்கியகருணையின் மேன்மையனைத்தும் வழங்குநின்செங்கைகொடு — கொந்தணவும்பொழி லொற்றிநகர்ப்பரை கொட்டுகசப்பாணி, குடிலையினிலைபெறு திரிபுரசுந்தரி கொட்டுகசப்பாணி. (எ)

அரையர்களவரவ ருளம்விழைவுறவெதி ரவிர்மணிபொரு ள்கொட்ட, வமரர்கள்வரமரு ளெனமுனமிடைபவ ரவிழ்ம லர்மழைகொட்டத் — தரைவளரடியவர் தொழுதெழினட மொடு தருகரமலர்கொட்டச், சரணடைபவருள மியவர்கை யொடுமொலி தழைதருபறைகொட்ட — வுரைதகநடமிடு மிறைவருமனமகிழ் வொடுமிளநகைகொட்ட, வுலகுறுபலவு யிர் களுமகிழ்பெறுநின தொளிவிழியருள்கொட்டக் — கு ரைகடலளவிய வொற்றிநகர்ப்பரை கொட்டுகசப்பாணி, குடிலையி னிலைபெறு திரிபுரசுந்தரி கொட்டுகசப்பாணி. (அ)

வேறு.

மலர்மகள்கலைமக ளுளநிறைபோத வனத்துறைசொற்பூ வை, மலரவனரியர னிவர்தொழிலாதிவ ளர்க்குமணிப்பா வை — யலர்சொரிதருமகிழ் விரிநறுநீழலி ருக்குமயிற்றோ கை, யரவிளமதியணி யிறையவர்தியாகரி டத்துநிதிச்சாகை — யிலகெழிலடிநினை யலருளமேவியி ருட்கடிவிற்சோதி, யி ரவொடுபகலினை பவர்மனநீலமி ரிக்குமருட்சோதி — குல வியவயன்க ரமலைபராபரை கொட்டுகசப்பாணி, கொடியி டையிடிநடை வடிவுடைநாயகி கொட்டுகசப்பாணி. (கூ)

படவரவணைமிசை விழிதுயிலுரணர் முட்டியவட்கார்கள், பலருயிருணுமொரு திகிரிகொள்பாணிய ரொட்டியபுத்தேளி — ருடனமுதுணவலை கடல்கடைகாரணர் கட்டுளவக்கோ தை, யொளிமணிதிருமகண் மருவியமார்பினர் முப்புரமுற் றுரோ—டலைசெய்திடவரன் விடுகணையானவ ரப்பரமற்கா ர்வ, மலர்தரவழகிய மனைவியுமானவர் துட்டையட்டேமு ன்—குடநடமிடுமொருவரதர்சகோதரி கொட்டுகசப்பாணி, கொடியிடையிடிநடை வடிவுடைநாயகி கொட்டுகசப்பாணி.

சப்பாணிப்பருவம் முற்றிற்று.

---

# முத்தப்பருவம்.



கொண்டலுகுமுத்தமும் வேயினுகுமுத்தமுங் கோலப்ப சும்பூகதங், கொட்டுமிளமுத்தமுங் கன்னலுகுமுத்தமுங் குளிர்செந்நெலுகுமுத்தமு — மண்டுமதமால்கரிக் கோட்டின்விளைமுத்தமும் மாதர்களம்விளைமுத்தமும், வன்றலைக் கொக்கின்விளை முத்தமுந்தாமரை மலர்க்கண்விளைமுத்தமும்வளைத் — தண்டரளமுத்தமும் மிப்பியுமிழ்முத்தமுந் தக்கவிதுமுத்தமுமெலாஞ், சமமின்றிவிலைசெயப் பட்டுநாளுடுபுரை தண்டாதுதாங்கவென்றுந் — தொண்டுகொண்டருளுநகை முத்தநிலாவைத்தநின் றொண்டைவாய்முத்தமருளே, சுரர்பரவுமாதிநகர் மருவுசுந்தரவல்லி தொண்டைவாய்முத்தமருளே. (௧)

பொங்கியபெரும்புன னெடுநீத்திரைக்கடல்பின்பு புரைவருதல்போற்றியம்மை, புரையற்றமுறுவலொடு மெதிரப்பெருந்தவம் போற்றலிங்கொண்ணுதெனச் — சங்கமுமிழ்நித்திலந் தன்னுட்கிடந்தவை தழீஇக்கொணர்ந்தெதிரிருப்பத், தயங்கியவிசும்பின்வளர் கங்கையும்பற்றித் தடந்திரைகடோறுமெறியப் — பங்கயநிதிச்சங்க நிதிகளுந்தம்முட் பதுங்கித்தவங்கள்புரியும், பன்மணித்தரளங்க ளவரவர்கொளத் தமது பானின்றகற்றிமகிழத் — துங்கவொளிகொட்டுநகை நித்திலநிரைத்தநின் றொண்டைவாய்முத்தமருளே, சுரர்பரவுமாதிநகர் மருவுசுந்தரவல்லி தொண்டைவாய் முத்தமருளே. (௨)

சந்தவெண்மதியமும் மத்தமுங்கங்கையுந் தாதுமலிவெள்ளெருக்குந், தண்ணங்கடுக்கையும் வெண்டலையுமரவுந் தரித்தருடியாகப்பிரான் — செந்திருமணந்தநெடி யோன்முதலுயிர்த்தொகை திகழ்ந்திடுமிளைப்பாறுமா, செறிந்த பலவண்டமு மழித்தெழுந்தாடுமத் திருநடனநோக்குந்தொ

று — மந்தமில்செழுங்கனக மன்றமுதலாமிடத் தாடுநட நோக்குந்தொறு, மசைந்தாடுபதுமநட நோக்குந்தொறுந் தொறு மம்மைநின்சிந்தைமகிழ்வாற் — சுந்தரமிகுந்தவள வெண்முறுவறேற்றுநின் றொண்டைவாய் முத்தமருளே, சுரர்பரவுமாதிநகர் மருவுசுந்தரவல்லி தொண்டைவாய்மு த்தமருளே. (ங)

நலங்கொழிருமார்பத்து நெடியோன்பிருந்தையெரி நன் காட்டுமத்தமதர, நாமகண்மணுளனுந் தன்மகள்புணர்ச்சி யினை நாடிக்கலங்கனுருறப் — பொலங்கலனணிந்தவயி ரா ணிபுணர்கேள்வனும் பூட்சிமுழுதுங்கண்பெறப், புரையற் றமுனிவர்முத லோர்களும்புரையுறப் போர்புரியுமதனை வெ ன்ற — வலங்கொளிறையவனந்த மாரவேள்படையெனவ யங்குமலர்வாளிகன்னல், வார்சிலைபிடித்தநின் செங்கைமல ர்நோக்கிமகிழ் கூரவதுநோக்கிநோக்கித் — துலங்குமிளந கைமூர லுள்ளேயரும்புநின் றொண்டைவாய் முத்தமரு ளே, சுரர்பரவுமாதிநகர் மருவுசுந்தரவல்லி தொண்டைவா ய் முத்தமருளே. (ச)

சிறையுற்றகோகிலப் பறவையும்பூவையுஞ் செய்யவாய்ப் பைங்கிள்ளையுஞ், சீருற்றவசுணமுங் கின்னரமுமம்மைநின் செல்வத்திருக்கோயிலி — னுறைதுற்றமென்மலர்ப் பைந்து ணர்நெடுங்கோட்டு நன்மணங்கமழும்வகுள, நண்ணியிசை கவர்மதி லின்புறஞ்சூழ்ந்துமணி நாகங்கள்காத்திருப்பக் — கறையற்றகந்திருவர் முதலோர்கைவீணையுங் காமர்குழலு ஞ்சந்நிதி, காப்பவரையுருகிடப் பட்டமரமுந்தளிர் பரப் பவுயிர்பலவுமகிழத் — துறைமுற்றுபண்ணோடு மின்மொழிமி ழற்றுநின் தொண்டைவாய்முத்தமருளே, சுரர்பரவுமாதிந கர் மருவுசுந்தரவல்லி தொண்டைவாய் முத்தமருளே. (ரு)

வேறு.

பத்திமிகுந்தவடியார்க்குப் பலவேறானபணிவிடையும், பதுமக்கடவுளுலகாக்கும் பணியுமளிக்கும்பணியரிக்கு — மத்தமிலைந்தவுருத்திரற்கு மாற்றும்பணியுமயேசுரற்கு, மறைக்கும்பணியுஞ் 'சாதாசிவற்கு வற்றாக்கருணையருட்பணியு— மொத்ததெனவேகொடுத்தருளு முனதுதிருவாய்பைங்கிளிக்கு, முறையேற்றுதலாலுற்றார்க்கே யன்றியெமக்குந்தரலாகு — முத்தநிகர்த்தசெங்கனிவாய் முத்தந்தருகமுத்தமே, முற்றுமெமையாளொற்றிநகர் முத்தே முத்தந்தருகவே.(௬)

வில்லைவளைக்குங் கொடும்புருவ மின்னேரனையதாதியர்பின், விளங்குநகையோடெதிர்வதென வேரித்தளவமுகைபிணித்திட் — டொல்லையுடைவதெனமுன்ன ருறுத்தாதிருண்டகுழற்செருகி, யொளிமிக்குடைந்துமுள்ளுடையா வுரத்ததினையலைத்துமென —நல்லதரளங்கோத்துரத்தினாற்றத் தகவே யெனவுளத்து, நயந்தகருணைப்பெருமகிழ்ச்சி நகையாலவர்கண்முகமலர்த்து—முல்லைநிகர்த்தசெங்கனிவாய் முத்தந்தருகமுத்தமே, முற்றுமெமையாளொற்றிநகர் முத்தே முத்தந்தருகவே. (௭)

திருந்துமாலையிடைக்கரும்பு சிதையப்பாகுதேன்புளிப்பச் செய்யகனிகளினைந்தழியத் தீம்பானெருப்பிற்சூடுண்ண வருந்தியெடுத்தகடலமிழ்தம் வானோர்சிறையிற்றளர்வெய்த வயங்குநினதுவாலெயிற்றில் வற்றாதூறுஞ்சுவையமுத மருந்துமுறுதிகுறித்தன்றே யகிலபுவனங்களுநீர வடர்ந்தவிடத்தைத்தியாகேச ரன்றுபருகினாரனந்த முருந்துநிரைத்தசெங்கனிவாய் முத்தந்தருகமுத்தமே முற்றுமெமையாளொற்றிநகர் முத்தேமுத்தந்தருகவே. (௮)

வேறு.

வழுவறுமுழுதுடன் மயிர்தழுவியமுனி மட்டுகுபொற்கமல, மலரணைவிரவிய வுயரியபிரமன் மணத்தமலர்த்துளவ—விழுமியதொடலைக ளுரமணிநெடியவ னட்டுநறைப்பதுமம், விரவியவிருமட மகளிர்கள்விடைமுக முற்றமுதற்குரவன்—பழுதறுமிவர்பலர் விழியெதிர்பதுமநன னட்டமளித்தருளும், பரிபுரவடியினர் பரிவொடுமொருமுறை பத்தினர்முத்தமிட—முழுதுலகமுமருள் வடிவுடையுமையவண் முத்தமளித்தருளே, முறைநிறைபொறையுறை மறையவனகர்மயின் முத்தமளித்தருளே. (க)

கடவுளரிடர்கெட வொருகரிமுகனையு யிர்த்தமடப்பிடியே, கதிர்மணிவெயில்விரி யிமவனொருவன் முளைத்தமலர்க்கொடியே—யிடரகிலமும்விட வயில்கொளுமுருகையெ டுத்துவளர்த்தவளே, யிறைவரருளொழி சிறுவிதிபுரியும கத்தையிறுத்தவளே—வடிமறைகுடிலையும் வடிவறுமடியர்ம னத்துமிருப்பவளே, வடவரைகுழையமு னெயிலடுமொருவரி டத்தமர்சிற்பரையே—முடியுடையவர்பணி வடிவுடையுமையவண் முத்தமளித்தருளே, முறைநிறைபொறையுறை மறையவனகர்மயின் முத்தமளித்தருளே. (க0)

முத்தப்பருவம் முற்றிற்று.

---

## வாரானைப்பருவம்.

நித்தியநிராமய நிராலம்பநிர்க்குண நிராதாரநிருவசனமாய், நீடியபரானந்த ரோடுகுணிகுணமுமாய் நின்றருள்பராபரையுநீ—சத்தியெனுமுதலுநீ விந்துவெனுமருளுநீ தயங்கியமனோன்மணியுநீ, தங்கியமயேசையும் நீயுமையுநீமலர்

த் தாமரையின்மடமாதுநீ—யெத்திசையுமேத்துகலை மாது நீயென்றுமறை யின்னுமுறையிடுவதல்லா, லின்னபடியென் றுணரது. தன்மையையறிந்தில தெமக்குளமிரங்கியருள்வா—யத்தனமரொற்றிநகர் வந்தமையினுய்ந்துளே மங்கலகாரணி வருகவே, யமலையந்தரியேக விமலமந்திரரூபி யமலசுந்தரி வருகவே. (க)

–மும்மலமதத்தினும் மிருவினைத்தொடரினும் மூடியவபக் குவமெனு, மொய்யிருட்கந்தினுந் தனுவாதிநான்கென மொழிந்திடுங்காவலரினு—மம்மரினிருக்கின்ற பலவகையுயிர்க்கரிவ ழாமறப்பிணித்தடக்கி, வான்வீடெனும்பெரிய வெளியூடு கைப்பமணி வார்கயிறுமங்குசமுநீ—செம்மலர்க்கைத்தலங் கொண்டுமறையறியாத சீறடிநிலந்தோய்தரத், தியாகப்பிரானிருந் தமரர்தொழநடமிடுந் திருவொற்றியூர்வருதலா—லம்மையும்மிம்மையும் மும்மையும்பேறுளே மம்மைமாதரி வருகவே, யமலையந்தரியேக விமலமந்திரரூபி யமலசுந்தரிவருகவே. (உ)

இருளென்னுமாணவ மலர்க்கடலமுந்தியறி வென்பதணுவளவுமின்றி, யிடருற்றிருந்தவடி யேங்களைப்பேரின்ப வெறிதிரைக்கடலழுத்த—மருளென்னுமதுமாறு பரையாகிமுன்பெங்கண் மாட்டுவந்தனையதுவலான், மற்றெங்கள்புன்மையையறிந்துவெளியினுநல்ல வடிவுகொண்டிறைவர்தேருக்—கருளென்னுமதியமுஞ் சேடனுமுரண்கொண்டு டற்றவவர்தங் களிடையுற், றெருள்ளருள்சுரந்தரு டியாகப்பிரானமரு மொற்றிமாநகரியினும்வந்—தருளென்னுமாறவ னிடத்தினிலமர்ந்தருளு மாதிகாரணிவருகவே, யமலையந்தரியேக விமலைமந்திரரூபி யமலசுந்தரிவருகவே. (ங)

சங்கரர்சதாசிவர் தயாநிதிசதானந்தர் சர்வேசர்சத்தர்சித்தர், சம்புதற்பரர்முன்பு தமதுமுதலுபகார நல்கியுஞ்சாரு

முயிர்க—ளெங்குயிிலுறைபவர்பதத் தியையாது தனுவாயியைந்துகன்மங்களீட்டி, யெண்பத்துநான்குநூறாயிரமெனும்பவமெல்லாமெடுத்துழிதரும் — துங்கவறியாமையை யொழித்தாளவருளினுற் றூயதலமோடுதீர்த்தந், தொக்கவெழின்மூர்த்தியு மொற்றிமாநகரில்வரு சுந்தரத்தியாகனெனுமவ்—வங்கணர்பெருந்தலைவர் தம்மொடினிதாயரு ளளிக்குமம்மனைவருகவே, யமலையந்தரியேக விமலைமந்திரரூபி யமலசுந்தரிவருகவே. (ச)

தூயபராவெனநின்ற வம்மைநீயாதியாய்த் துதையுமரனிச்சையாகிச், சுடர்கின்றஞானமாய்க் கிரியையாயருவமாய்த் தொக்கவருவுருவமாகி—யேயுமருளுருவமா யிலயமொடுபோகமதி காரமாயின்பமாகி, யியற்றுமைந்தொழிலுக்கும் வித்தாகியுடலாதி யிசைவித்தபலவுயிர்க்கு — மேயமலமுற்றுந் துமித்தருளுமாறும்பர் விண்ணத்துவதிகற்பக, மெய்யருள் கிடைத்திட வடுத்துமலர் வகுளமாய் விளங்குமெழி லொற்றி நகர்வந்—தாயுமடி யாருளத் தள்ளூறநின்றதாரறிவர்மங்கலைவருகவே, யமலையந் தரியேக விமலைமந் திரரூபி யமலசுந் தரிவருகவே. (ரு)

வேறு.

கற்றூர்புனித நாவகத்துங் கரைந்துகரைந்து விழிநெடுநீர்
காலவுருகும் பேரன்பர் கருத்தினிடத்து மீன்றெடுத்த
வுற்றூர் தமது மடித்தலத்து முறைசேர் மறையின்முடியகத்து
மூடற்பொழுது மணிதிருத்த வுற்றநயப்பி னொடுவணங்குஞ்
செற்றூர்புரநீற் றியதியாகர் செய்யசடில மேலிடத்துந்
தீராச்சுவடு படவூன்றுந் திருத்தாணிலமு முடிசூட
வற்றூக்கருணை யொற்றிநகர் வடிவாள் வருகவருகவே
வையமுழுது முய்யவரு மாதேவருக வருகவே. (சு)

கடியார்தெய்வக் கற்பகப்பூங் காவிற்றெரிந்து பறித்தெடுத்துக், கண்ணாயிரத்தோன் முதலான கடவுட்குழாங்கள் சொரிபூவு—மடியாரன்பிற் பழுதகற்றி யாய்ந்துசொரியு நறும்பூவு, மம்மேவன்மைப் பூவைமறைத் தடர்ந்துநிமிரு மணித்தலத்தின் — முடியால்வணங்கி மலர்மகளிர் முதிர்பேரொளியி னணிதிருத்த, முன்னுந்தொறுங்கூ சிடுகினது முளரிமலர்த்தாள் பெயர்த்திட்டு—மடியார்க்கருணை யொற்றிநகர் வடிவாள் வருக வருகவே, வையமுழுது முய்யவரு மாதே வருக வருகவே. (எ)

குணில்வார்முரச மழைபொழியக் குழுவானவர்க ளகந்தழைப்பக், கொதிநஞ்சயின்ற தியாகேசர் கோலவதுவைபுரிநாளி—னணியாரம்மி மிசையேற்று மந்தப்பொழுதுங் கலவியிடை, யமிழ்தமூற வருடலுறு மந்தப்பொழுதும் புலவியிடைத்—தணியாவிழைவி னினிதுணர்த்துந் தன்மையிடத்துமலைவளைத்த, தடந்தாமரைக்கை மிசைமலருந் தாட்டாமரைமென் மெலப்பெயர்த்து—மணிவாரிதிசூழொற்றிநகர் வடிவாள் வருகவருகவே, வையமுழுது முய்யவரு மாதேவருக வருகவே. (அ)

விளங்கவதுவை புரிகாலை விண்ணோர்முனிவோ ரனைவோரு, மிடைந்தகனத்தா லாற்றாது மெலிந்துதாழ்ந்து வடபூமி—துளங்கவதனைச் சமமாக்கத் துறுகற்பொதிய வரைக்கேகுந், தோலாத்தவத்து மிகப்பெரிய சுவைத்தீந் தமிழின்குறுமுனிவர்க்—குளங்கொள்கருணைத் தியாகேச னொருவருடனே மணக்கோல, முவந்துகொடுப்பத் திருவொற்றி யூர்வந்தருளு மணிவிளக்கே — வளங்களடியார்க் கருள்கின்ற வடிவேவருக வருகவே, வையமுழுது முய்யவரு மாதேவருக வருகவே.

தேசம்பரந்த பெருங்கீர்த்திச் செல்விவருக தியாகேசர்
தேவிவருக வெமையாண்ட செம்பொற்சிலம்பின் மகள்வருக
பாசம்பரிக்குந் தீயோர்க்கும் பாசம்பரிக்குந் தாய்வருக
பரவுமடியாருள்ளகத்துப் பரவுங்கருணைத் தேன்வருக
நேசம்பரந்த வொற்றிநகர் நிமலைவருக வானந்த
நிலையம்வருக வுலவாத நிதியம்வருக கற்பகப்பூ
வாசம்பரந்த குழற்கற்றை வடிவாள்வருக வருகவே
வையமுழுது முய்யவருமாதேவருக வருகவே. (௧௦)

வாரானைப்பருவம் முற்றிற்று.

---

## அம்புலிப்பருவம்.



மங்கலமிகுந்தபல மணியொளிருமலைமீது வந்திடுந்தோற்றத்தினுன், மல்குமிரவலரொலாங் களிதூங்கவேவெள்ளியின் வந்தொளிரும்வடிவத்தினுற் — பொங்கியமகிழ்ச்சியொடு கர்தலர்களாகிய புலவருக்கமுதுதவலாற், பொன்னஞ்சிலம்பினை யடிப்படுத்திடுதலாற் புகழுலகுசூழ்ந்துவரலாற் — கொங்குகமழ்சோலைபுடை சூழொற்றிநகரினருள் கூர்ந்ததிரிபுரசுந்தரக், கோமளப்பெருமாட்டி கொண்டருளருட்செயல் குறிக்குநின்செய்கையாகு — மங்கணுலகுய்யவருள் செய்யுமலைவல்லியுட னம்புலீயாட வாவே, யங்கணர்மருங்கிலுறை சங்கரிசுமங்கலியொ டம்புலீயாடவாவே. (௧)

தூயவடிவெய்தினை யமிழ்தந்தரித்தனை தொல்லுலகுதொழுநின்றனை, துலங்கொளிவிமானத் திருந்தனையொரொற்றியிற் றன்னிவளர்பலகையிறையை—யேயுமுழுதன்பினுல் வந்தனைபுரிந்தனை யிறைவரவரிடமெய்தினை, யெண்ணிலாவுயிர்கட்கு மின்பம்பெருக்கியெய்ப் பாற்றுகின்றனைநினதுமெய்ப்—பாயவொளியெங்கும் பரப்புகின்றனையிவை பன்னுதி

ரிபுரசுந்தரப், பாலைதன்பாலுமுள பார்க்கினின்செயலெலாம் பார்ப்பதிகொள்செய்கையாகு—மாயுமடியாருள்ள நேயமுறுமிறைவியுட னம்புலீயாடவே, யங்கணர்மருங்கிலுறை சங்கரிசுமங்கலியொ டம்புலீயாடவாவே. (௨)

வெண்டிரைசுருட்டும் பெருஞ்சுவைப்பாற்கடல் விளங்கநீ தோன்றினையிவள், வேறின்றியெவ்வுலகு மாகிநியிரானந்த வெள்ளக்கடற்பிறந்தாள்—புண்டரிகமலர்குவிய வமிழ்தகிரணங்கணீ பொழிவையிவளடியருள்ளப், பூங்கமலமலர்குவிய வின்னருட்கிரணங்கள் பொழிவளிரவதனிலொருநீ—வண்டலைநறுங்குவளை மகிழ்விப்பைபகலுமிவண் மாதரோங்கட்குவளைகண், மகிழ்விப்பணீதவம் வயக்கியுஞ்சார்வைகொண் மற்றன்னையழையாதபோ — தண்டார்பணியாதிநகர் கொண்டவடிவம்மையுட னம்புலீயாடவாவே, யங்கணர்மருங்கிலுறை சங்கரிசுமங்கலியொ டம்புலீயாடவாவே. (௩)

மருள்கொண்ட வுலகத்தி லிருள்கின்றவிருளதனை மாற்றுகின்றனைநீயிவள், மன்னுயிர்க்காணவ விருட்டினைப்பின்வந்து மருவாமன்மாற்றுகின்று — டெருள்கொண்டுபைங்கூழ் வளர்த்திநீமற்றிவள் செறிந்தவகிலத்துயிரொலாஞ், செல்வமொடுமலிதர வளர்த்துவருகின்றனள் சேண்வெளியின் வருதியொருநீ—பொருள்கொண்டு பரவெளியினோடுலகமெங்கணும் பொற்பநிறைகின்றனளிவள், பொருவிலிவளருளெளிது கிடையாதுநீசெய்த புண்ணியப்பயனெய்தினை—யருள்கொண்டவொற்றிநகர் மருவுவடிவுடையவளொ டம்புலீயாடவாவே, யங்கணர்மருங்கிலுறை சங்கரிசுமங்கலியொ டம்புலீயாடவாவே. (௪)

கலைவளருநின்னமிழ்த முண்கின்றபுலவோர்கள் கடலமிழ்த முண்டுமவுணர், கைப்போர்க்குடைந்துபன் முறையுநின்

னொடுபெருங்கலைக்கடற்கரைகண்டார்—தலைவளரும்வேள்வி யவி யுண்ணப்புகுந்தொருவர் தாக்கவுயிர்சாம்பினரவர், சார் புமொருசார்பாக வேகநீயெண்ணலை தயங்கியதசும்லைபவெ ன்ற—முலைவளருமிவளமுத முண்டபெருவலியினான் முக்க ணொருகளிறுமிளைய, முருகனுந்தானவரை வென்றின்பமீந்த மூன் முறைமைகளேமுற்றுமெண்ணி — யலைவளருமொற்றி நகர் மருவுவடிவம்மையுட னம்புலீயாடவாவே, யங்கண ர்மருங்கிலுறை சங்கரிசுமங்கலியொ டம்புலீயாடவாவே.

தீயமலமூலத்தி னிருண்மூழ்குவிழியெனச் செயலாதிமா ய்ந்தழுந்தந், திருகுவினைமாற்றவே தியாகப்பிரானொடுந் தேவியிவள்கருணைகூர்ந்து — மாயையையளித்துடன் கன்ம முமளித்தறிவு வளர்விக்குநன்றிசிறிது, மதிக்கவறியாயது கி டக்கவிப்பொழுதநீ வானுறுதலைசிறப்பப்—பாயவுல்கந்தொ ழத் திரிகின்றநின்னுடைய பாக்கியம்யாரதுசொலாய், பண் டசுரன்வெளவிக் கரப்பநெடியோன்கரம் பற்றிவருநாளின் முன்ன—ராயுமறைசேரொற்றி மேயவடிவம்மையுட னம்பு லீயாடவாவே, யங்கணர்மருங்கிலுறை சங்கரிசுமங்கலியொ டம்புலீயாடவாவே. (சு)

பூதிமிகவருளென்று மிடர்களொடுபிணிகளைப் போக்கெ ன்றுமுலகாயுதர், புல்லியபௌவுத்தரரு கந்தர்வயிணவர்மு தற் பூவுலகின்மாந்தர்பலருந்—தீதினவ்மணிமுடித் திருமார் பன்முதலான தேவர்களும்வந்துநின்றார், தியாகப்பிரானுந் ந் தேவியிவண்மலர்முகச் செவ்விபார்த்தாடுகின்ற—ஜோதி நிறைகலையுடைய யாயினிவைபார்த்தேனு முற்றுநின்பிணி யுமறவு, மொழிப்பையினியாயினுங் கலைமதிக்கடவுளென் றேதுபெயரிருபொருள்பட—வாதிநகருறைகின்ற மாதுசுந் தரியினொடு மம்புலீராடவாவே, யங்கணர்மருங்கிலுறை சங் கரிசுமங்கலியொ டம்புலீயாடவாவே.

கடலில்வருநுரையென்று மொருமுனிமுகத்திெனாரு கண்ணில்வருபீளையென்றுங், கடல்கடையுமத்தினிடு தறியென்றுமரவுண்டு கான்றசோறென்றுமொழியா — மடமிகுதியாற்குரவன் மனைமாதுநலனுண்ட மாபாவியென்றுமிறைகாய், மாற்றலன்குடையென்றும் வளர்சாபமிகவேற்று மாழாந்ததுட்டனென்று — முடல்குறையவேபண்டு கறையுமுடையவனென்று முன்றீங்கைமதியாமையே, யொருதினந்தியாகர்பொற் றேர்க்குருளியானநன் றென்றேமதித்தழைத்தா — ளடர்கருணைபெறலாகு மொற்றிவடிவம்மையுட னம்புலீயாடவாவே, யங்கணர்மருங்கிலுறை சங்கரி சுமங்கலியொ டம்புலீயாடவாவே. (அ)

தக்கன்வளர்யாகத்தி லிவளையவமதிசெயத் தண்டாமரைக்கணெடுமால், சதுமுகத்தவனாதி யனைவர்க்குமவ்வவ்வ தண்டம் புரிந்தகாலை—புக்கவொருநீயுஞ் சுரித்தவதனந்தான் புழுங்கத்துகைத்திறுத்த, போர்வீரனென்று முளனின்றுநீ மதியாதுபோந்தெங்ஙனுய்யவல்லாய் — தொக்கவல்லிருளைத் தணத்துமெனமதியாதி தோகைமயிவடியாகப்பிரான், சுடர்விழிபுதைத்தஞான் றென்செய்தியோர்ந்துபார் தூய்மைவளரொற்றிநகரி—னக்கயிலையென்னவே புக்கசுந்தரியினொடு மம்புலீயாடவாவே, யங்கணர்மருங்கிலுறை சங்கரிசுமங்கலியொடம்புலீயாடவாவே. (௯)

தாரணிமுடிக்கட்டி யாகப்பிரானினது சாபந்தணிக்கவைத்த, தயவுமொருசேடனன் சாத்துமலர்நீக்கிநீ சாத்துமாறென்னையென்று—போரணிகுறித்துனைத் தாக்கச்சினந்துழிப் போந்தருள்புரிந்ததயவும், பூவையிவண்முசுநுதன் மருங்குலெழின்மதிதொறும் பொற்பச்சுரந்துதிரியுங் — காரணமதித்தகருணைப்பெருக்கன்றுகொல் கவுரியிவள்சிறிதுசீறிற், கட்டியசடைக்காட்டி ராதுபின்னுயிர்வாழ்தல் கைகூடலரி

தகண்டா—யாரணமுழங்கொற்றியூரின்வடிவம்மையுட னம்புலீயாடவாவே, யங்கணர்மருங்கிலுறை சங்கரிசுமங்கலி பொடம்புலீயாடவாவே. (௧0)

அம்புலிப்பருவம் முற்றிற்று.

---

## அம்மானைப்பருவம்.

வந்தாதரித்திசைக் கவிபாடுபுலவோர்க்கு மலரடிகளேவ வேகி, மயிலைநகரொருவணிகன் மணிவல்லியீந்தருளு மகிழ் நர்விளையாடலுக்கி—முந்தார்வமொடுநகை குறித்துமற்று ருநீயு மொத்தவான்புலவருக்கு, முதிரொளியுமிழ்ந்துள்ள விழைவுகளனைத்தையும் முன்னுமுனளிக்கவல்ல — சிந்தாம ணித்திரள் படைத்தெடுத்தெறிகின்ற செய்கையேமானவொ ளிகால், செம்மணித்திரளா லிழைத்தபலவம்மனைகள் செங் கைத்தலத்தினேந்தி—யந்தாமரைத்தடஞ் சூழொற்றிவடிவ ம்மை யம்மானையாடியருளே, யாடகச்சிலையீன்ற பாடகத் தாட்செல்வி யம்மானையாடியருளே. (க)

தொல்லைப்பெரும்பிணித் தறுகணவமெனுஞ்—சூரனைப் பொருதழித்த, தோலாதபிரதாப விரவியுஞ்சிறடிகள் சூழ்ந் தவடியார்க்குநான்கு—மல்லற்பெரும்பொருள்க ளீயுஞ்செ ழுங்கீர்த்தி மதியமும்வான்சுடர்களை, வணங்கவெழுகின்றதி றமானவொளிர்செம்மணியின் வைத்தவம்மனைகள்பலவும்— வில்லிற்பொலிந்ததர ளத்தினிழையம்மனையும் வெவ்வேறெ டுத்தணிந்து, மேகக்குழாங்கடவழ் பூகப்பொதும்பர்மணம் வீசொற்றியூரினுயிர்கட் — கல்லற்பவத்துயர கற்றவுறைசிற் சத்தி யம்மானையாடியருளே, யாடகச்சிலையீன்ற பாடகத் தாட்செல்வி யம்மானையாடியருளே. (உ)

பூலோககயிலாய மாம்பதமநகரிற் பொலிந்தெழுந்தறிவி
த்தவர், பூங்கண்புதைத்துமுன் றமதொளிகெடுத்தவப் பொ
ருவற்றதிறனுமிறவாச்—சாலோகமுதலான முத்தியுங்கீழ்ப்ப
ட்ட சகலசித்தியுங்கொடுக்குந், தன்மையுமதித்துவிண் ணிருசு
டரும்வந்தரு டரக்கொண்டு தாங்கள்வாழு—மாலோகநிமி
ர்கின்ற தெனவெண்மைசெம்மையின் வாய்ந்தொளிர் கழங்
குநிமிர, வளர்கின்றபைங்குரற் செந்தினைத்தண்புனம் வைகி
க்கவண்டிரித்திட் — டாலோலமிடுமகளை மருகியெனவைத்
தபெண் ணம்மானையாடியருளே, யாடகச்சிலையீன்ற பாட
கத்தாட்செல்வி யம்மானையாடியருளே. (௩)

செங்கைவந்தேற்றவர் தமக்குப்பெரும்பொருள் செறித்து
மெனவுள்ளமறியாத், தெய்வதப்பதுமநிதியும்பணிலநிதியுஞ்
செருக்கித்தருக்கிநிற்ப—மங்கைநின்செங்கைமலர் நோக்கி
யிறுமாப்பினை மாற்றுதுமெனக்கருணையால், வயங்குமிருநிதி
யமும்மெண்ணிலபடைத்துவிண் வைப்பினுக்கேறவிடல்போ
ற்—பொங்குசெம்மணியிற் புரிந்தனவுமுத்திற்புரிந்தனவுமள்
ளியுந்திப், பொருகருங்கடலுந் திரைக்கைகொடு பன்மணிக
ள் போந்தெதிர்சொரிந்திறைஞ்சி—யங்கெழுநிரந்தர புரிக்க
ண்வடிவுடைமங்கை யம்மானையாடியருளே, யாடகச்சிலையீ
ன்ற பாடகத்தாட்செல்வி யம்மானையாடியருளே. (௪)

ஊற்றுஞ்செழுந்தேன் மலர்ப்பசுங்கற்பக முவந்துவந்தொ
ருவகுளமா, யுனதுசெந்தாமரை விழிக்கடைதிறந்தொழுகு
மொண்கருணை வெள்ளநிறையத்—தூற்றுந்துளைப்பூவி னுதி
புரிவளர்கின்ற தொன்மையையறிந்திரண்டு, சுடர்நிதியும்வ
ந்துதிரு முன்னர்க்கிடப்பத் தொடிக்கையினெடுத்தணைத்து
ச்—சாற்றும்வரங்களு மளித்துவிண்விடுகின்ற தன்மைபோ
ல்வெண்மைசெம்மை, தம்மைமுன்விடுத்துநின் விற்குணம
வற்றலர் தனைத்தொடர்வதெனநீலத்—தாற்றம்பலம்மனை

விடுத்துவடிவுடைமங்கை யம்மானையாடியருளே, யாடகச்சிலையின்ற பாடகத் தாட்செல்வி யம்மானை யாடியருளே. (௫)

வேறு.

முத்தினிழைத்தவும் வித்துருமத்தின் முடித்தவுமிக்கொளிகான், முழுமணிமொய்த்தவும் விலையுலகேழுமுனிந்தவிர்கோமேதம்—வைத்துநிரைத்தவும் வச்சிரமிட்டவும் வவ்விப்பலகையுரு, வதிதருசத்தியோ சாதர்முன்னுதிய மகிழ்நர்களைவர்களு—முத்தமிநின்னிள மைப்பருவத்தினு வந்தனையக்கருதி, யுறுதொறுநீயிது பருவமலாமையை யுன்னித்துள்ளுவபோ—லத்தமிகுத்திடு மொற்றிநகர்ப்பனை யாடுகவம்மனையே, யரிபிரமர்கள்பணி திரிபுரசுந்தரி யாடுகவம்மனையே. (௬)

சோதிமணிப்பல கைக்குளமர்ந்தரு டுரியாதீதவொளி, சுரர்தொழவரமிகு முப்புரநீறச் சுடர்த்மணியமேருக்—கோதைவரிச்சிலை யெனமலர்வென்ற குடங்கைவளைத்தநின், கொற்றமெனக்கொள மும்மலவலாயர் குறும்புசெய்முப்புரமு—நீதிசெய்யடியர் தொழப்பொடிசெய்யவந் நெடுவரையோடெண்கன், னிலையுநின்னிருகை வளைப்பதெனப்பல நிறமணியம்மனைதொட்—டாதிபுரத்தமர் கோதையிளங்கொடி யாடுகவம்மனையே, யரிபிரமர்கள்பணி திரபுரசுந்தரி யாடுகவம்மனையே. (௭)

முந்தொருகற்ப முறங்கரியுந்தி முகிழ்த்தவன்வீடெய்த, முன்னியறிந்த வயன்வளர்யோக முழங்கெரியூடுருவா—வந்துலகுய்ய விருந்தவர்கண்ணென மருவிருகோள்களுநின், மலர்க்கையுறப்பெரு மேன்மைமதித்தொளிர் மற்றெழுகோள்களுமவ்—வுந்தொளிகோள்களை முன்கொடுவந்தரு ளுற்றுவிண்ணேகுதல்போ, லொளிமிகுநவமணி யம்மனைகைக்கொண்டொளிர்சங்கலைகடல்வா — யந்திதொறுங்குமு முதிபுரத்த

வளாடுகவம்மனையே, யரிபிரமர்கள்பணி திரிபுரசுந்தரி யா கவம்மனையே. (அ)

தீண்டற்கரியவர் திருவுளமகிழத் திகழண்டத்திரளுஞ், சே றிதருமற்றைய பலவுநின்சிந்தனை சிறிதுதொடங்குதலு—ம் ண்டித்தொழிலுறு தற்கொருசான்றென வெண்ணிலியம்ம னையு, மெங்குமெழுந்து மிலங்கத்தளிரி னிணைக்கைச்சிறி சையாத்—தூண்டியபரிகரி யிரதமுமைந்தர்க டொழில்பயி லக்கிளருந், தூசியின்விண்ணகர் மண்ணகர்நிரைச் சுடர்விழி யிமையாட—வாண்டச்சுரர்வெரு ளாதிபுரத்தவ ளாடுகவம் மனையே, யரிபிரமர்கள்பணி திரிபுரசுந்தரி யாடுகவம்மனை யே. (௯)

எடுத்தெறியும்பல வம்மனைகட்கிணை யக்கனிவாய்மலரு மிசைகட்குளமுரு கித்தலைவீழ்ந்திடு மிறகுளகின்னரநேர் தொடுத்தெதிரம்மனை யாடுறுமலர்கண் சுரர்மகளிர்கள்பாடச் சுவைநனிகேட்டு விசும்பினெழுந்து சுவைத்திறநுகர்தோறு மடுத்தெறியம்மனையெனவவைதமையு மருண்டனர்சிலர்நோ மலிந்தெழுமம்மனை யூடுநின்விழியு மதர்த்துப்பெரிதலவ[க்க வடித்தவரின்புறு சிவபுரியுமையவ ளாடுகவம்மனையே யரிபிரமர்கள்பணி திரிபுரசுந்தரி யாடுகவம்மனையே. (௰)

அம்மானைப்பருவம் முற்றிற்று.

---

## நீராடற்பருவம்.

கள்ளோடலர்ந்தநறு மென்மலர்ச்சுண்ணமுங் களபப்பசு ஞ்சுண்ணமுங், கர்ப்புரச்சுண்ணமுங் கலவையஞ்சுண்ணமு ங் கமழ்கின்றபலசாந்தமும்—புள்ளோடியாடி முராலுஞ்சே

வளாடுகவம்மனேயே, யரிபிரமர்கள்பணி திரிபுரசுந்தரி யாடுகவம்மனேயே. (அ)

தீண்டற்கரியவர் திருவுளமகிழ்த் திகழண்டத்திரளுஞ், செறிதருமற்றைய பலவுநின்சிந்தனை சிறிதுதொடங்குதலு—மீண்டித்தொழிலுறு தற்கொருசான்றென வெண்ணிலியம்மனையு, மெங்குமெழுந்து மிலங்கத்தளிரி னிணைக்கைச்சிறிதசையாத்—தூண்டியபரிகரி யிரதமுமைந்தர்க டொழில்பயிலக்கிளருந், தூசியின்விண்ணகர் மண்ணகர்நிகரச் சுடர்விழியிமையாட—வாண்டச்சுரர்வெரு ளாதிபுரத்தவ ளாடுகவம்மனேயே, யரிபிரமர்கள்பணி திரிபுரசுந்தரி யாடுகவம்மனேயே. (௯)

எடுத்தெறியும்பல வம்மனைகட்கிசை யக்கனிவாய்மலருமிசைகட்குளமுரு கித்தலைவீழ்ந்திடு மிறகுளகின்னரநேர் தொடுத்தெதிரம்மனை யாடிறுமலர்கண் சுரர்மகளிர்கள்பாடச் சுவைநனிகேட்டு விசும்பினெழுந்து சுவைத்திறநுகர்தோறு மடுத்தெறியம்மனையெனவவைதமையு மருண்டனர்சிலர்நோமலிந்தெழுமம்மனை யூடுநின்விழியு மதர்த்துப்பெரிதலவ[க்கவடுத்தவரின்புறு சிவபுரியுமையவ ளாடுகவம்மனேயே யரிபிரமர்கள்பணி திரிபுரசுந்தரி யாடுகவம்மனேயே. (௧௦)

அம்மானைப்பருவம் முற்றிற்று.

---

## நீராடற்பருவம்.

கள்ளோடலர்ந்தநறு மென்மலர்ச்சுண்ணமுங் களபப்பசுஞ்சுண்ணமுங், கர்ப்புரச்சுண்ணமுங் கலவையஞ்சுண்ணமுங் கமழ்கின்றபலசாந்தமும்—புள்ளோடியாடி முரலுஞ்செ

